உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானதரு வாணியை உள்நாடு "

| | | |
|---|---|---|
| மலர் ௬ | ஆங்கீரச ஆண்டு பங்குனித் திங்கள்<br>1933 ௵ மார்ச்சு ௴ | இதழ் ௫ |

## வளராச் சமயங்களின் பத்து குறைகள்

[பத்திராசிரியர்]

[குறிப்பு :—இது யான் மதுரை சைவசித்தாந்த சமாஜத்தின் முதலாண்டு விழாவில் 24-12-32-ல் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம். ஆசிரியர் ஜே. எஸ். மக்கென்ஸி என்பார் கூறுவதைத் தழுவியுள்ளது. J. S. Mackenzie's Outlines of Social Philosophy-Book III Chapter II section 9. pages 223—226 (1918 Edition).]

அவைத்தலைவரவர்களே, எனது அருமைச் சகோதரி சகோதரர்களே!

இச்சமாஜத்தின் முதலாண்டு விழாவில் ஒரு சொற்பொழிவு செய்ய என்னைப் பணித்த உங்கள் பெருங்கருணைக்கு வந்தனம். மக்கள் தொடர்புடைய ஏனைய பொருள்களைப் போலவே சமயங்களும் வளர்ச்சிக்குரிய சாதனங்களாகும். எனவே சமயங்களும் வளரும் பொருள்களே. நெற்பயிரில் புற்பூண்டுகள் களைகளாக நின்று நெற்பயிர் வளர்ச்சியைத் தடுப்பதுபோல சமயங்களிலும் சில களைகள் உண்டு. அக்களைகள் அச்சமயங்கள் வளருதற்குத் தடைகளாக நிற்கும். களைபிடுங்கி நெற்பயிரை வளரச் செய்வதைப் போலவே, சமயங்களிலுள்ள களைகளையும் பிடுங்கியெறிந்து ஒவ்வொரு சமயத்தையும் அவ்வச்சமயத் தலைவர்கள் வளர்க்க வேண்டும். இன்றேல் வளர்ச்சியின்றி மக்கட் டொடர்பு குன்றி சமயங்கள் தளர்ந்து அழிந்தொழியும். பல சமயங்களின் பொதுவியல்பு, சிறப்பியல்பு, பிரமாணம், இலக்கணம், சாதனம், பயன் முதலிய பாகுபாடுகளை யெல்லாம் ஒப்பிட்டு ஆராய்ந்து சமயங்களின் வளர்ச்சிக்குத் தடைகளாக வுள்ளவற்

றைத் தொகுத்து ஆசிரியர் மக்கென்ஸி யென்ற பேரறிஞர் (மேற்கூறிய நூற்பகுதியில்) செவ்வையாக விளக்கியுள்ளார். அவர் ஆராய்ச்சியை ஒட்டியே ஈண்டு சில கருத்துக்களை உங்கள் முன்னிலையில் தெரிவிக்கின்றேன். அவற்றுள் பொருத்தமுள்ளவற்றைக் கொள்வதும் ஏனையவற்றை மீண்டும் ஆராய்ச்சி செய்வதும் அறிஞர்களாகிய உங்கள் கடமையாகும்.

மேற்கூறிய ஆசிரியர் வளராச் சமயங்களில் காணக்கிடக்கும் குறைபாடுகளைப் பத்து தலைப்புகளில் தொகுக்கின்றார். அவைகள் குருட்டு நம்பிக்கை (Superstition) உருவவழிபாடு (Idolatry) பிரமாண சாதனை (Dogmatism) அதிரச வாதம் (Sectarianism) சமயவெறி (Fanaticism) அகவேற்றுமை (Hypocrisy) மரபு வலியுறுத்தல் (Conventionalism) சுவாநுபவம் (Individualism) அநுபூதி ரகசியம் (Mysticism) பணிவின்மை (Irreligion) என்பனவாம். இவற்றை மிகச் சுருக்கமாக ஆராய்வாம்.

பல சமயங்களில் பல கொள்கைகளும் வழிபாடுகளும் நம்பக்கூடாதனவாகவும் சரியெனச் சாதிக்கக் கூடாதனவாகவும் உள்ளன. அறிவிலும் நாகரிகத்திலும் கீழ்நிலையிலுள்ள ஒரு கூட்டத்தினர் சில கொள்கைகளையும் வழிபாடுகளையும் ஏற்று, பின்னர் அறிவும் நாகரிகமும் வளர்ந்த பிறகும் பழக்கம் காரணமாக அவைகளை விடாது வைத்துக் கொள்கின்றார்கள். பழையனவற்றில் ஒரு குருட்டு நம்பிக்கையும் அவற்றை யொழித்தால் தீங்கு நேரிடும் என்ற பயமும் தோன்றுகின்றன. இந்தக் குருட்டு நம்பிக்கையே சமய வளர்ச்சிக்கு மிகப் பெருந்தடையாக வுள்ளது.

முதன் முதலில் உருவ வழிபாடு குறியீட்டு வழிபாடாகவே நிகழ்ந்தது. (Symbolic worship) நாளடைவில் குறிகள் எவைகளைக் குறிக்கின்றன என்ற ஞாபகமும் உணர்ச்சியும் மறைந்து உருவங்களே வழிபடும் பொருள்களாக மாறிவிட்டன. உதாரணமாக நடராஜ உருவத்தின் தத்துவ நுட்பத்தை யறிந்து நிகழ்த்தப்பெற்ற வழிபாடு நாளடைவில் அதை யறியாது அவ்வுருவத்துக்குப் பொற்கவசம் பொற்பணிகள் சமர்ப்பிக்கும் வழிபாடாக மாறிவிட்டது. உயிரை விடுத்து உடலைப் பிடித்துக்கொள்வது சமயத் தளர்ச்சியே யாகும்.

சமயக் கொள்கைகள் அறிவுக்குப் பொருத்தமா யிருத்தல் வேண்டும். அறிவுக்குப் பொருத்தமா யில்லாவிடினும் சில பிரமாண நூல்களிற் கூறப்படுவதால் அவைகள் உண்மைகளே என்று சாதிப்பதாலும் நாளடைவில் சமயத் தளர்ச்சியே மிகும்.

சில சமயிகள் ஏனைய சமயிகளின் கொள்கைகளைக் காண்பதற்கும் கூசி அவைகள் அனைத்தும் பொய்யென்று சாதிப்பர். இவர்கள் அதிரச வாதிகள். உலகில் பரந்துள்ள உண்மைகளின் பயனை இவர்கள் இழக்கின்றனர். இவ்வதிரச உணர்ச்சி முதிர்ந்து சமயவெறியாக மாறிப் பெரும் போரையும் சமயத்தின் பெயரால் விளைக்கும். இச்சமய வெறியானது தனது சமயத்தை ஏனையோரெல்லாம் கொள்ளவேண்டும் என வலிந்து வற்புறுத்தும். மேற்கூறிய ஐந்து குறைபாடுகள் பொதுவாகப் புறத்தே நிகழ்வன; கீழ்வரும்

மற்ற ஐந்தும் அகத்தே நிகழ்வன. முழுமனதோடு அங்கிகரியாது அரை குறையாக நம்பிச் சிலவற்றை அநுட்டித்தலால் அகத்துக்கும் புறத்துக்கும் வேற்றுமை தோன்றும். மரபு வலியுறுத்தல் என்ற குறையும் அதனடியிற் பிறக்கும். தங்கள் தங்களுக்குத் தோன்றிய வழியிலெல்லாம் புதிய முறைகளை நிறுவிக்கொண்டு சுவாநுபவம் என்ற பெயரால் இஷ்டம்போல் செய்யும் குறையும் உண்டாகும். தனக்குத் தனக்கெனத் தனித்தனி வழி வகுப்பதால், ரகசியங்கள் மிகுந்து, உலகத்துப் பொதுமக்கள் துயரத்தைக் கவனியாது, இரக்கமின்றி நடத்தும் அநுட்டான விசேடங்கள் மிகும். சில சந்தர்ப்பங்களில் இத்தகைய தனிவழி முற்றி உலகில் பணிவென்பதே தேவையில்லை, பணிதற்குரிய பொருளே உலகிலில்லை என்ற மயக்கமும் ஏற்படும். (The attitude of nil admirari).

இவைகளை யெல்லாம் நன்முக மனதிற் பதித்து ஒவ்வொருவரும் தத்தம் சமயக்கொள்கைகளிலும் வழிபாட்டிலும் மேற்கூறிய குறைகளில் எவை யெவை யுள்ளன, அவற்றை எவ்வாறு களைந்து சமயத்தை வளர்க்கவேண்டும் என்று எண்ணித் துணிந்து கருமம் முடிக்குமாறு வேண்டுகிறேன். இதுகாறும் பொறையுடன் கேட்டிருந்த உங்களுக்கு எனது நன்றி பெரிதும் உரித்து.

---

சைவசித்தாந்த மகா சமாஜத்திய

## 28-ம் ஆண்டு உத்தியோகஸ்தர்கள்

[குறிப்பு :—கீழ்வரும் பெயர்கள் ஒவ்வொன்றின் முன் சைவந்திருவாளர் என்றும் இறுதியில் அவர்கள் என்றும் சேர்த்து வாசிக்கவும்.]

**தலைவர்**

1. மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி. ஏ., மாஜிதாசில்தார், சிந்து பூந்துறை, திருநெல்வேலி.

**உதவித் தலைவர்கள்**

2. திரு. வி. கலியாணசுந்தர முதலியார், 'நவசக்தி' ஆசிரியர், 12, கணபதி முதலி தெரு, இராயப்பேட்டை, சென்னை.
3. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை, பி. ஏ., பி. எல்., வழக்கறிஞர், கருந்திட்டைக் குடி, தஞ்சாவூர்.

***பொதுக்காரியதரிசி, பத்திராசிரியர்**

4. ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்., வழக்கறிஞர், 150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, ஜார்ஜ்டவுன், சென்னை.

***உதவிப் பத்திராசிரியர்**

5. அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ., உரிமையாளர், ருக்மிணி குக்கர் கம்பெனி, 5, தெற்கு மாதாகோவில் தெரு, இராயபுரம், சென்னை.

---

*பொதுக் காரியதரிசியாகவும், உதவிப் பத்திராசிரியராகவும் முறையே அ. சோமசுந்தரம் செட்டியாரும், G. கல்யாணம் பிள்ளையும் தேர்ந்தெடுக்கப் பெற்றனர். அவர்கள் அப்பதவிகளை ராஜிநாமா செய்து விட்டபடியால் 30-1-33-ல் நடந்த நிர்வாக சபைக் கூட்டத்தில் அப்பதவிகட்கு மேலே குறித்துள்ளவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### வரவேற்புக் காரியதரிசி

6. சாமி - வேலாயுதம் பிள்ளை, பி. ஏ., எல். டி., தலைமையாசிரியர், போர்டு ஹைஸ்கூல், குடவாயில், நன்னிலம் தாலுக்கா.

### பொருட்காப்பாளர்

7. தி. சு. சுந்தரம் பிள்ளை, 88, திருப்பள்ளி தெரு, ஜி. டி., சென்னை.

### உதவிக் காரியதரிசி

8. G. கல்யாணம் பிள்ளை, பி. ஏ., டிப். எக்., எழுத்தாளர், ரெவென்யூ போர்டு ஆபீசு, சேப்பாக்கம், திருவல்லிக்கேணி.

### ஏனைய நிர்வாகசபை உறுப்பினர்கள், சென்னை

9. க. இரத்தின முதலியார், 120, குளோ ஹைரோட், வேப்பேரி, P. O.
10. பாலி. சு. நெல்லையப்பர், ஆசிரியர், "லோகோபகாரி", சிந்தாதிரிப்பேட்டை.
11. பி. தியாகராஜ பிள்ளை, பி. ஏ., எல். டி., 18, ஆபீசு, வேங்கடாசல முதலிதெரு, திருவல்லிக்கேணி.
12. கின்றை - தங்கவேல் முதலியார், 22, விநாயக மேஸ்திரி தெரு, ஜி. டி.,
13. சே. சிவஞானம் பிள்ளை, வெள்ளியம்பல விலாசம், 37, அப்பு முதலி தெரு, மயிலாப்பூர்.
14. ஈ. த. இராஜேசுவரியம்மாள், எம். ஏ., எல். டி., 412, ஹைரோட், திருவல்லிக்கேணி.
15. காழி - சிவ - கண்ணுசாமிப் பிள்ளை, பி. ஏ., 32, இராமசாமித் தெரு, ஜி. டி.,
16. டி. பாலசுந்தர முதலியார், உரிமையாளர், சோல்டன் கம்பெனி, திருவல்லிக்கேணி.
17. தி. நல்லசிவன் பிள்ளை, பி. ஏ., பி. எல்., வழக்கறிஞர், மயிலாப்பூர்.
18. C. S. சுவாமிநாத முதலியார், பி. ஏ., கத்திட்ரல் P. O.
19. ச. நடேச முதலியார், ஜவுளி வியாபாரம், பசார்ரோட், இராயப்பேட்டை.
20. மறை-திருநாவுக்கரசு, தமிழாசிரியர், கார்பொரேஷன் ஹைஸ்கூல், நுங்கம்பாக்கம்.

### மாதக் கணக்குப் பரிசோதகர்

கி. குப்புச்சாமி முதலியார், திருக்குறள் விளக்க உரையாசிரியர், 3/2, பிள்ளையார் கோவில் தெரு, கிருஷ்ணாம்பேட்டை, திருவல்லிக்கேணி P. O.

### ஆண்டுக் கணக்குப் பரிசோதகர்

ஈ. க. தணிகாசல முதலியார், பி. ஏ., பி. எல்., வழக்கறிஞர், 412, ஹைரோட், திருவல்லிக்கேணி.

### பத்திராசிரியக்கழகம், பணியாளர்கழகம்

1. மா. வே. நெல்லையப்ப பிள்ளை.
2. மு. கதிரேசச் செட்டியார்.
3. ச. சச்சிதானந்தம் பிள்ளை.
4. த. வே. உமாமகேசுவரம் பிள்ளை.
5. ந. மு. வேங்கடசாமி நாட்டார்.
6. சாமி - வேலாயுதம் பிள்ளை.
7. அ. சோமசுந்தரம் செட்டியார்.
8. ம. பாலசுப்பிரமணிய முதலியார்.
9. பு. சமரபுரி முதலியார்.

### ஆராய்ச்சிக் கழகம்

1. மு - கதிரேசச் செட்டியார்.
2. கா - சுப்பிரமணிய பிள்ளை.
3. ந மு - வேங்கடசாமி நாட்டார்.
4. ம - சுவாமிநாத சிவாசாரியார்.
5. ச. சச்சிதானந்தம் பிள்ளை.

## வெளியூர் ஆலோசனை சபை

### செங்கற்பட்டு

1. வீ. துரைசாமி முதலியார், கொருக்கம்பேடு.
2. கா. வேதாசல முதலியார், காவித்தண்டலம்.
3. A. M. பரமசிவானந்தம், அங்கம்பாக்கம்.

### வட ஆர்காடு

1. W. வீரராகவ முதலியார், வாலாஜா பேட்டை.
2. K. இராமலிங்க முதலியார், பள்ளிக்கொண்டை.
3. T. D. பார்த்தசாரதி முதலியார், குடியாத்தம்.

### தென் ஆர்காடு

1. C. ஆறுமுக முதலியார், விழுப்புரம்.
2. P. V. தேவராஜ முதலியார், திருப்பாதிரிப் புலியூர்.
3. M. சின்னசாமி ரெட்டியார், திருவெண்ணெய் நல்லூர்.

### தஞ்சாவூர்

1. சு. வி. கனகசபை பிள்ளை, மன்னார்குடி.
2. நீ. கந்தசாமி பிள்ளை, தஞ்சாவூர்.
3. கே. இராஜ மாணிக்கம் பிள்ளை, கும்பகோணம்.

### திரிசிராப்பள்ளி

1. ந. மு. வேங்கடசாமி நாட்டார், திரிச்சி.
2. அ. மு. சரவண முதலியார், லால்குடி.
3. அமிர்தம் செட்டியார், பூவாளூர்.

### இராமநாதபுரம்

1. தெ. பழ. சித. சதாசிவம் செட்டியார், கொத்த மங்கலம்.
2. வெ. நா. இலக்குமண செட்டியார், கோட்டையூர்.
3. இரா - கு. நல்ல குற்றாலம் பிள்ளை, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

### திருநெல்வேலி

1. கா. சுப்பிரமணிய பிள்ளை, நெல்லை.
2. ந. சிவகுருநாத பிள்ளை, தூத்துக்குடி.
3. டி. எஸ். அறம் வளர்த்தநாத பிள்ளை, பி. ஏ., குலசேகரபட்டினம்.

### மதுரை

1. J. M. சோமசுந்தரம் பிள்ளை, மதுரை.
2. K. கோதண்டபாணி பிள்ளை, மதுரை.
3. எஸ். முத்துக்கருப்ப பிள்ளை, திலகோட்டை.

### கோயம்புத்தூர்

1. B. வேங்கடாசல முதலியார், கோவை.
2. C. M. இராமச்சந்திரசெட்டியார், ஷை.
3. காளத்தி முதலியார், பொள்ளாச்சி.

### திருவிதாங்கூர்

ரா. பதுமநாப பிள்ளை, நாகர் கோவில்.

### பெங்களூர்

வி. சே. ஆறுமுக முதலியார்.

### புதுக்கோட்டை

1. வ. பழ. சா. சாமிநாதன் செட்டியார், மேலைச்சிவபுரி.
2. M. PR. VR. அழகர்சாமி வேளர், கோனாப்பட்டு.

### சேலம்

1. அ. வரத நஞ்சைய பிள்ளை, தோரமங்கலம்.
2. அ. மாணிக்க செட்டியார், சேலம்.
3. K. நடேச உடையார், சேலம்.

### நீலகிரி

1. V. குஞ்சிதபாதம், அரவங்காடு.
2. T. கோவிந்தசாமி பிள்ளை, பெர்னில்.

### சிற்றூர்

1. ச. சச்சிதாநந்தம் பிள்ளை, சிற்றூர்.
2. K. திரிபுராந்தக முதலியார், பாகசாலை.
3. C. நரசிங்க முதலியார், சிற்றூர்.

### புதுச்சேரி

1. சிங்கப்பூர் - அண்ணாமலை முதலியார்.

2,3 - (தகுந்தவர்கள் தேவை.)

# திருவகுப்பு

முருகப் பெருமான் திருவருள் கைவரப்பெற்றுப் பதினாறாம் நூற்றாண்டில் திகழ்ந்த வரும் சிவாநுபூதிச் செல்வருமாகிய அருணகிரிநாத சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளிய 'திருவகுப்பு' என்னும் அரிய நூலுக்கு, எமது தமிழ்ப்போதகாசிரியர் ஒருவர் குறித்து வைத்த குறிப்புகள் எமக்குக் கிடைத்தன. அவைகளைச் செப்பனிட்டு "சித்தாந்தம்" வாயிலாக வெளியிடத் துணிந்தோம். பின்னர் இது புத்தகரூபமாய் வெளி வரும். இவ்வுரையில் காணும் குற்றங்களைத் தமிழ்ப் பேரறிஞர் இப்பத்திராசிரியர் அவர் கட்கு எழுத வேண்டுகிறேன்.

[பெயர் விழையான்]

## திருக்கையில் வழக்க வகுப்பு

(a) தருக்குவ செருக்களம் வெருக்கொள வதிர்ப்பன
தடக்கர நிமிர்த்துய ருடுக்குல முதிர்ப்பன
(b) தடித்தெழு குலப்புவி நடுக்குற வதிர்ப்பன
தழைச்செவி படைப்பன திரட்கயி லையொப்பன
(c) சதுர்த்தச தலத்தையு மெடுத்தக டவுட்பணி
சகஸ்ரப ணபத்தியு மொடுக்குற நடப்பன
(d) சமுத்ரம தனத்தில முதத்துட னுதிப்பன
தரத்தன தலைச்சுர நதிப்புனல் குளிப்பன
(e) அருக்கர்ப தமுட்பட மிதித்திடு பதத்தன
அறப்படு கொலைத்தொழில் புறப்படு முகத்தன
(f) அரக்கர்ப டைகெட்டமு றியப்பொரு பதத்தன
அயற்குமம ரர்க்குமொ ருபொற்பதி யளிப்பன
(g) அளித்தவ முதுக்கவ ளமொக்குவ ளமுத்தெறி
யலைக்கடல் கலக்குவ குலக்கிரி குலுக்குவ
(h) அடித்தெழு பொருப்பினை நெருப்பெழ விழிப்பன
அதிக்ரம கமப்ரவு டவிக்ரம மதத்தன
(i) மருக்குல வுகற்பக வனத்தலர் பறிப்பன
வளைத்தெழு தருக்களை மொளுக்கென முறிப்பன
(j) மதிப்பிள வெனச்செரு கிவைத்தென மணிச்சதுர்
மருப்பின விமைப்பற விழித்தந யனத்தன
(k) வளைத்தகி ரியைப்பொடி படுத்தியி பமெட்டையு
மலைத்தவ ணடிப்பட மடப்பிடி யணைப்பன
(l) மழைப்புயல் கிழிப்பன புனற்பசி தணிப்பன
மணிக்கண கணப்பண மதத்ரயம் விதிர்ப்பன
(m) திருத்திய புனத்திடை வனத்தழை யுடுத்தினி
திருப்பவள் விருப்புறு வரைப்புயன் வினைப்பகை
(n) செகுப்பவ வினைத்தலை முடித்தருள் க்ருபைக்கடல்
சிவத்தக மலச்சர ணத்தறு முகப்பொருள்

(o) செகத்ரய முகிழ்த்தவு நரத்கிரி புரைக்கொரு
திருப்புதல் வனுற்பல கிரிப்பெயர் தரித்தருள்

(p) திருத்தணி மலைக்கிறை திருப்புகழ் படிப்பவர்
சிறப்பொடு பெறத்தரு திருக்கையில் வழக்கமே.

தருக்குவ - தருக்குவன ; செருக்களம் - போர்க்களம் ; வெருக்கொள - அஞ்சும் படி ; அதிர்ப்பன - தட்டுவன : தடக்கரம் நிமிர்த்து - பெரியகையை நிமிர்த்து ; உயர் - உயர்ந்த ; உடுக்குலம் - நட்சத்திரக் கூட்டத்தை ; உதிர்ப்பன - உதிர்த்துவிடுவன ; தடித்து - பருத்து ; குலம் - கூட்டமாகிய ; எழுபுவி - ஏழுலகங்களும்; நடுக்குற - நடுங்க ; அதிர்ப்பன - ஒலிப்பன ; தழைச்செவி படைப்பன - தழைந்த செவிகளையுடையவையா யிருப்பன ; திரள்கயிலை ஒப்பன - திரண்ட கயிலையை நிகர்ப்பன ; சதுர்த்தச தலத்தையும் - பதினான்கு லோகத்தையும் ; எடுத்த - தாங்கின ; கடவுள் - தெய்வத்தன்மையுள்ள ; பணி - ஆதிசேடனது ; சகஸ்ரம் - ஆயிரமென்னும் தொகையுள்ள ; பணபத்தியும் - படவரிசையும் ; ஒடுக்குற - ஒடுங்கும்படி ; நடப்பன - நடவாநிற்பன ; சமுத்ர மதனத்தில் - பாற்கடல் கடையும்போது ; அமுதத்துடன் உதிப்பன - அமிர்தத்துடன் பிறப்பன; தாத்தன - மேன்மையையுடையன ; தலை - முதன்மையுள்ள ; சுரநதிப்புனல்-கங்காஜலத்தில் ; குளிப்பன - மூழ்குவன. (௯)

அருக்கர் பதம் உட்பட - சூரியமண்டலங்கள் உள்ளடங்க ; மிதித்திடு - மிதிக்கிற ; பதத்தன - கால்களையுடையன ; அற - மிகுதியாக ; படு - உண்டாகிற ; கொலைத் தொழில் - கொல்லுந் தொழில் ; புறப்படு - தோற்றுகிற ; முகத்தன - முகத்தையுடையன ; அரக்கர் படை - அரக்கர் சேனை ; கெட்டு முறிய - தோற்று அழியும்படி ; பொரு-போர் செய்கிற ; பதத்தன - கால்களையுடையன. அயற்கும் - பிரமனுக்கும் ; அமரர்க்கும் - தேவர்களுக்கும் ; ஒரு - ஒப்பற்ற ; பொன்பதி - திவ்யபதவிகளை ; அளிப்பன - தருவன ; அளித்த அமுது கவளம் - கொடுக்கப்பட்ட சோற்றுத் திரளையை ; மொக்குவன - விழுங்குவன ; முத்து எறி - முத்துக்களை யெடுத்து வீசுகிற ; அலை - அலைகளையுடைய ; கடல் - கடலை ; கலக்குவ - கலங்கச் செய்வன ; குலக்கிரி - அஷ்ட குல பர்வதங்களை ; குலுக்குவ - குலுங்கச் செய்வன ; அடித்து - புடைத்து ; எழு பொருப்பினை - எழுகின்ற மலைகளை ; நெருப்பெழ - நெருப்பெழும்படி ; விழிப்பன - விழிப்பன ; அதிக்ரமம் - மேற்பட்ட ; கமம் - நிறைவாகிய ; ப்ரவுடம் - தைரியத்தோடுகூடிய ; விக்ரமம் - வெற்றியையுடைய ; மதத்தன - மதத்தையுடையன. (௱)

மருகுலவு - வாசனையோடுகூடி விளங்குகிற ; கற்பகவனத்து ; கற்பகச் சோலையின், அலர் - மலர்களை ; பறிப்பன - கொய்வன ; வளைத்துஎழு - வளைந்தெழுகிற ; தருக்களை - மரங்களை ; மொளுக்கென - மொளுக்கென்று ; முறிப்பன - ஒடிப்பன ; மதி பிளவுஎன - சந்திரனது வகிரென்னும்படி ; செருகிவைத்தன - செருகி வைத்தாற் போல ; மணி - அழகிய ; சதுர்மருப்பின - நான்கு கொம்புகளை யுடையன ; இமைப்பு அற - இமைத்தலில்லாமல் ; விழித்த - திறந்த ; நயனத்தன - கண்களை யுடையன ; வளைத்த கிரியை - உலகத்தைச் சூழ்ந்திருக்கும் சக்கரவாள மலையை ; பொடிபடுத்தி - பொடியாக்கி ; இபம் எட்டையும் - எட்டுத்திசை யானைகளையும் ; மலைத்து - போரிட்டு ; அவண் அடிப்பட - அவ்விடத்தடிபடும்படி ; மடப்பிடி - இளம் பிடிகளை ; அணைப்பன - தழுவுவன ; மனழ - குளிர்ச்சியை யுடைய ; புயல்கிழிப்பன - மேகத்தைப் பிளப்பன ; புனல் பசி தணிப்பன - நீர்ப்பசியைத் தணிப்பன ; மணி - (யானையின்மீது இடப்பட்டிருக்கும்) மணிகள் ; கணகணப்பண - கணகண வென்று சப்திப்பன ; மதத்ரயம் - மும்மதத்தையும் ; விதிர்ப்பன - சிந்துவன. (௲)

திருத்திய புனத்திடை-திருத்தப்பட்ட புனத்தில் ; வனத்தழை யுடுத்து - காட்டுத் தழையை யுடுத்து ; இனிது இருப்பவள் - இனிதாயிருப்பவள் ; விருப்புறு - விரும்பு

கிற; வரைப்புயன் - மலைபோலுந் தோள்களை யுடையவன்; வினைப்பகை - வினைகளாகிய பகைவரை; செருப்பவன் - வெல்வோன்; நினைத்தவை - நினைத்தவற்றை; முடித்தருள் - முடித்தருள்கிற; க்ருபைக்கடல் - கருணை சமுத்திரம்; சிவத்த - சிவந்த; கமலத்து - தாமரை மலர்கள் நிறைந்த; சரவணத்து - சரவணப் பொய்கையிலுதித்த; அறுமுகப் பொருள் - ஆறுமுகப் பெருமான்; செகத்ரயம் - மூவுலகத்தையும்; முகிழ்த்த - தோற்றுவித்த; உதரம் - திருவயிற்றையுடைய; திரிபுரைக்கு - உமாதேவிக்கு; ஒரு திருப்புதல்வன் - ஒரு திருமகன்; உற்பலகிரி பெயர் - கல்லாரகிரியென்னும் பெயரை; தரித்தருள் - தரித்தருளிய; திருத்தணி மலைக்கு இறை - திருத்தணி மலைக்கிறைவன் (அவனது) திருப்புகழ் படிப்பவர் - திருப்புகழை யோதுவோர்; சிறப்பொடு - மேன்மையொடு; பெற - பெறும்படி; தரு - (ஞானத்தைத்) தருகிற; திருக்கையில் வழக்கம் - திருக்கையில் வழக்கம் என்றவாறு. (க)

குறிப்புக்கள்:—திருக்கையில் வழக்க வகுப்பு:—திரு - அழகிய; கையில். (முருகப் பெருமானது) திருக்கரங்களில்; வழக்க - வழங்குவதாகிய ஞானப் பிரசாதத்தினது பெருமையை எடுத்துக் கூறும்; வகுப்பு - பிரிவு. ‘ஞான நாயகன்’ ‘ஞானந் தானுருவாகிய நாயகன்’ என்று கந்தபுராண நூலாசிரியர் முதலியோரால் போற்றித் துதிக்கும் தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமான் ‘ஞானமேயான திருவுருவுடையவன்’ என்பது வெள்ளிடைமலை. அத்தகைய ஞான சொருபி; தன்னைச் சரணடைந்த அடியவர்கட்குத் தன் அருமைத் திருக்கரத்தால் ஞானப்பிரசாதத்தை வழங்குகின்றார் என்பது பெறப்படுகின்றது. அந்த வழக்கத்தின் சிறப்பை எடுத்துக் கூறுவான் போந்த நமது அருணகிரிநாத சுவாமிகள், ஞானத்தை யானையாக உருவகப்படுத்தி அந்த யானையின் தொழிற்றிறங்களை எல்லாம் இவ்வகுப்பில் எடுத்துக் கூறுகின்றார். ஞானத்தை யானையாக உருவகப்படுத்துவதற்கு உள்ள ஆதாரங்களை யாம் ஞான வேழ வகுப்பின் உரையில் எடுத்துக் காட்டியுள்ளாம். ஆண்டுக் கண்டு கொள்க. ஞானம் என்பது பண்புப் பெயராய் கண்ணினுற் காணக் கூடாததாயிருக்கும் அருவப் பொருள். அதை எவ்வாறு ஒரு வஸ்துவாகக் கூறுவது என்பீராயின்? கூறுதும்; சைவ சமயாசாரியர்களில் ஒருவராய மணிவாசகப் பெருமான்; ‘மூல பண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே’ என்று திருவாய் மலர்ந்திருப்பதே பெரிய ஆதாரமாகும். ஞான தானம் பொழிந்து (சௌந்தரியலகரி - செய் 1.) என்னுந்தொடரும் இதனை வலியுறுத்தும்; ‘பிழைபடா ஞான மெய்ப் பொருள்’ (திருப்புகழ் 536.) ‘எண்ணரிய சிவஞானத்து இன்னமுதங் குழைத்தருளி - உண்ணடிசிலென ஊட்ட உமையம்மை’ என்னும் பெரியபுராணச் செய்யுளும் இதற்கு சான்று பகரும்.

மணிகண கணப்பண (1) - யானைக்கு மணி கட்டியிருத்தல் மரபு - இதனை: சனதிசை மணி யென்று இருசுடரும் புணைகளிற்றைப் போற்றல் செய்வாம் (சௌந்தரிய லகரி செய் 1.) கணகண வென்பது ஒலிக் குறிப்பு; அகலமுடையன முதுகு இருபுடையிலும் அணியு மணி கணகணவென அதிர் தரு - ககனமுகிலென உயர் வடிவுடையன - கதியின் விததியின் முடுகின கரிகளே (வில்லி பாரதம் - பதினாரும் போர் செய் 20.) என்னுஞ் செய்யுளும் இதனை வலியுறுத்தும்; இவையே யன்றி; இராமாயணம், திருவாய்மொழி, பாகவதம் ஆகிய நூல்களிலும் இந்தப் பிரயோகம் மிகுதியாகக் காணக் கிடக்கின்றது.

திருந்திய புனத்திடை - வரைப்புயன்:—1 (1) வரிசிலை மலைக்குறவர் பரவிய புனத்திதனின் மயிலென இருக்குமொரு வேடிச்சி காவலனே (வேடிச்சி காவலன் வகுப்பு) (2) மருவளாடவி வனிதையர் பாவ மாகத இதனில் இருப்பாள் கணவா (சேவகன் வகுப்பு) (3) பானைக்குழல் வள்ளி பதம்பணியும் - வேளைச் சுரபூபதி மேருவையே (கந்தர் அநுபூதி - ) வேடர் காட்டில் விளைபுன ஏனல்காத்த சிறுமியை - வேடமாற்றி வழிபடும் இறையோனே (திருப்புகழ் 1214.)

**வினைப்பகை செதுப்பவன் :—** பிறவியை ஒழிக்கும் சாமி பவமதை தெறிக்கும் சாமி (திருப்புகழ்1178)உருகுமடியார் இருவினைத் தொகை அறுக்குமவன் (பூதவேதாள வகுப்பு.)

**நினைந்தவை முடிந்தருள் கிருபைக்கடல் :—**(1) மறவாதவர் நினைப்பவை முடிக்குமவன் (பூத வேதாள வகுப்பு) (2) நினையுமவை முடிய வருவநும் (சீர்பாத வகுப்பு.) (3) எண்ணிய எண்ணியவாறே சிறியனுக் கீந்தருளும் - புண்ணியனே நின்மகிமையை ஓர்ந்திலன் பொய்யவனேன் (சங்கிதிமுறை - அலங்காரம் செய் 97)

**சரவணத்தறு முகப்பொருள்:—**(1) முருக சரவண மகளிர் அறுவர் முலைநுகரும் அறுமுக (சீர்பாத வகுப்பு) (2) ஞாலமேத்த வழிபடும் ஆறுபேர்க்கு மகவென நாணல் பூத்த படுகையில் வருவோனே (திருப்புகழ் (1214) (3) முதல்வ பார்ப்பதி புதல்வ கார்த்திகை முலைகள் தேக்கிட உண்ட வாழ்வே திருப்புகழ் செய் (1061) (4) மறுவறு மாரலாகு மாதர் மூவிருவர் தாமும்-நிறை தருசரவணத்தில் நிமலனை அடைந்து போற்ற-உறுநர்கள் தமக்கு வேண்டிற்று உதவுவோன் ஆதலாலே - அறுமுக வொருவன் வேறாய் அறு சீருர் உருவங் கொண்டான் (கந்த - உற்பத்தி - திருஅவதாரம் செய் 116).

**திரிபுரைக்கொரு திருப்புதல்வன் :—**(1) திரிபுரை புனிதை வனிதை அபிராவை அனகை; அபிராம நாயகிதன் மதலை (சீர்பாத வகுப்பு). (2) அறுலை தருந்திருமதலை (வேல்வாங்கு வகுப்பு.)

**உற்பல கிரிப்பெயர் - திருத்தணி மலைக்கிறை:—**(1) திருத்தணி வெற்புறை சோதி (சித்து வகுப்பு) (2) இந்திர நீலச் சிலம்பினன் (புயவகுப்பு) - (3) தினமும் உற்பலமலர் திருத்தணியிறை (ஞானவேழ வகுப்பு) (4) இந்த வெற்பினைத் தொழுதுளார் பவமெலா மேகுஞ் - சிந்தை அன்புடன் இவ்வரையின்கணே சென்று - முந்த நின்ற இச்சுனை தனில் விதிமுறை மூழ்கி - வந்து நந்தமைத் தொழுதுளார் நம்பதம் வாழ்வார் (கந்த புராணம் - வள்ளி திரு - 224) (5) பாதகம் பல செய்தவராயினும் பவங்கள் - ஏதும் வைகலும் புரிபவராயினும் எம்பால் - ஆதரங்கொடு தணிகை வெற்படைவரேல் அவரே-வேதன் மாலினும் விழுமியர் எவற்றினும் மிக்கார் (கந்தபுராணம் - வள்ளி திரு 227).

திருத்தணி மலைக்கு இறை(யானவர்) (தனது) திருப்புகழ் படிப்பவர்கள் சிறப்பொடு பெறத் தருதிருக்கையில் வழக்க(மானது) தருக்குவ (a) அதிர்ப்பன (a) உதிர்ப்பன (a) அதிர்ப்பன (b) செவிபடைப்பன (b) கயிலை ஒப்பன (b) ஒடுக்குற நடப்பன (c) அமுதத்துடன் உதிப்பன (d) நதிப்புனல் குளிப்பன (d) மிதித்திடுபதத்தன (e) புறப்படு முகத்தின (e) பொருபதத்தன (f) பொற்பதியளிப்பன (f) அமுதுக்கவளமொக்குவன (g) கடல் கலக்குவ (g) கிரிகுலுக்குவ (g) நெருப்பெழ விழிப்பன (h) மதத்தன (h) அலர் பறிப்பன (i) மொளுக்கென முறிப்பன (i) சதுர் மருப்பின (j) நயனத்தன (j) பொடிபடுத்தி (k) அணைப்பன (k) கிழிப்பன (l) தணிப்பன (l) கணகணப்பண (l) விதிர்ப்பன (l) என்று இயைத்துப் பொருள் கொள்ளுக.

---

## மெய்கண்டாரும் சிவஞானபோதமும்

ஒரு சிறந்த ஆராய்ச்சி நூல். மெய்கண்டார் வரலாறு, சிவஞான போதச் சூத்திரங்கள், வார்த்திகம், உதாரண வெண்பாக்கள், தி. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதிய இலகுவான உரை முதலியன அடங்கியது. தனிப்பிரதி—ரிஜிஸ்தர் தபாற்கூலி யுட்பட ரூ. 1-5-0. பத்துப் பிரதிகட்கு ஒரு பிரதி இனம்.

# ஆலய முதல் விழாவில் அப்பர் எழுந்தருளல்

[தி. கி. நாராயணசாமி, கிழக்கு மருதூர்.]

சுந்தரர் பதிகமுடைய திருத்தினைநகர் நடுநாட்டுத் தலங்களுள் ஒன்று. வெளிவராத இத்தல புராணம் ஸ்ரீமத் ஞானியார் சுவாமிகளிடத்து ஒன்று உண்டு. சுந்தரர் *இரண்டுமுறை வழிபாடு செய்த இப்பதியில் இறைவன் பெரியான் பள்ளனுக்கு அருள் புரிந்ததும், பண்டைத் தமிழ் நூல்களில் பெரிதும் எடுத்தாண்டு சிறப்பிக்கப்படும் தினையின் பெயரால் இத்தலப் பெயர் அமைந்ததும் சிந்திக்க உரியன. வெளிவராத சிழ்வரும், வெட்டுநடையைத் தழுவி திருத்தி அமைத்த †கல்வெட்டு, இவ்வூர் ஆலயத் தென்சுவரில் முடிவுபெறு திருப்பது. இதன் காலம் கி. பி. 1305. திருநாவுக்கரசு தேவர் திருநாளின் முதல்நாளில் உழல எழுதலும்; கெடிலம், கடிலம், கருட நதி என்ற வழக்குடைய நதியின் பெயர் திருமுறையில் போந்துள்ள வரிவடிவி லிருப்பதும், பன்னிரண்டு நாள் விழா நிகழ்தலும், கடலாட்டும், நக்ஷத்திரத்தைச் சுட்டி விழா குறித்தலும், விழாவிற்கு வருவாயின் வரிவகையும் கூர்ந்து நோக்க உரியன. இத்தலத்தில் இதில் சுட்டிய வைகாசி மாதத்திலேதான் பெருவிழா நிகழ்கின்றது. ஆனால் அப்பர் விழாவும் கடலாட்டும் நின்றுபோய்விட்டன. முதல்நாளில் அப்பர் பவனிவருதல் தென்னாட்டில் சிலதலங்களில் இன்றும் நிகழ்கின்றதாம். அதன் கருத்து, ஆண்டவன் வருமுன் வீதிகளை உழவாரப் பணியால் அப்பர் தூய்மைப்படுத்துவதாம். பணியையும் தொண்டரையும் சிறப்பிக்கும் இவ்விழாவை மீண்டும் நிகழ்ச்சியில் கொண்டுவருதல் தர்மகர்த்தர்கள் கடமை யல்லவா?

திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ வீரபாண்டிய தேவர்க்கு யாண்டு ௯ஆவது பங்குனிமாதம் இருபதாந்தியதி நாள் ஜயங்கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலத்து உடையார் திருத்தினை நகருடையார் கோயில் ஆதி சண்டேஸ்வர தேவகன்மி கண்காணி காணத்தார்க்கு ஆண்டார்களூர் பற்று அருமொழி தேவன் வாய்க்காலுக்கு வடக்கு, கேடிலவாற்றுக்குத் தெற்கு, நடுவுட்பட்ட சிறையாரும் நாட்டாரோம்: விவசைதப் பெருமாள் திருமேனிக்கு நன்றாக இவ்வாண்டு முதல் திருவைகாசித் திருநாள் எழுந்தருளவும் இத்திருநாள் வைகாசி விசாகத்தே திருக்கடலிலே தீர்த்தம் பிரசாதிக்கவும் இத்திருநாளுக்கு உடற்கொண்டு கொண்ட திருநாவுக்கரசு தேவர் திருநாள் முதல் நாச்சியார் திருநாள் அறுதியாக நாள் பன்னிரண்டுக்கும் அமுதுபடி, சாத்துபடி, திருப்பள்ளித்தாமம், திருவிளக்கு எண்ணை உள்ளிட்டவைக்கு உடற்கோள் படிக்குப் பெறுவதாக நிச்சயித்த நம் நாட்டில் வழிச்சாரியை கொள்ளும் துறைகளிலே தலைச்சுமைக்கும், எருத்துப் பொதிக்கும், பேர் ஒன்றுக்கு இரண்டாக வந்தகாசும், தலைச்சுமைக்கு ஒன்றாக வந்தகாசு பெறவும் (............)

---

*௭ தடு. ௧௧; ஏயர் ௧௧௭: பார்க்க. † 121 of 1904.

# சித்தாந்த சாரம்

## காப்பு - வெண்பா

மூவாத முத்திநெறி முப்ப தவதாமுந்
தேவா கமத்தின்வழி செப்பவே—மேவித்
திசைவதனத் தான்றனக்குஞ் சிதோற்கு மெட்டாக்
கசவதனத் தான்சரணங் காப்பு.

## நூல்

ஒன்றுதலோ னருள்புரிந்த வேதாக மங்கள்
கருதரிய புராணங்க ளியாவையினுங் கருத்து
நண்ணரிய பதிபசுபா சந்தெரித்த லாகு
நலங்கொள்பதி யேதுலக வியல்பே தென்னிற்
றிண்ணமுறு மாயைதான் சடமாகி யருவாந்
திருந்துருவாய் வரமாட்டா சீவனுஞ்சேர்ந் தறியான்
மண்ணதுதான் கடமாகா குலாலன் வேண்டு
மற்றதுபோ லிறைவனுளன் மாயைநடத் திடவே. (க)

அப்பதிதான் பரமான வானந்த மயமா
யசலமாய் நிராமயமா யமலமா யருளா
யொப்பிலதா யருவுருவாய் ரூபாரூபத்
தொருமுதலா யவைகடந்த வொளியாகி வெளியாய்த்
தப்பில்பரி பூரணமா யனந்த கோடி
தருமண்டப் பரப்பனைத்து முட்புறம்பா யருவா
மெய்ப்பொருட்கு முள்ளீடாய் வாக்குமனங் கடந்த
வின்பாகி யணுவிலணு மகத்தினுக்கு மகத்தாம். (உ)

இருள்வெளிபோ லாணவத்தா லறிவிழந்த பசுவா
யிந்தமயக் கால்வினைக ளீட்டியதற் கேற்ற
வருமருவி நரகசுவர்க் கம்புவியிற் சுழன்றே
யுடல்பொறிகள் மாறிக்கொண் டூழ்வழியா லூட்டுந்
திருவருளை யிகழ்ந்தேக தேசியுமாய்ச் சித்தாய்ச்
சிற்றறிவா யணுவாகிச் சீவனுயிர் பிராணன்
புருடனெனும் பெயர்பெற்று மல(பரி)பாகத் துயிர்கள்
பூதநா யகனருளாற் பூரணத்துற் றிடுமே. (ங)

ஆணவஞ்செம் பிற்செறிந்த களிம்பு போலு
மழன்றகன லடக்கியிடுங் காட்டம் போலும்
பூணுமுயிர்க் கனுதியா யறிவுதொழில் மறைத்துப்
போதமுற வுயிர்க்குயிராம் பொருளையறி யாம
னீணெறிசே ருலகியற்கைப் பொய்யினைமெய் யாக்கி
நிறைபுலன்கள் வழிபோகம் புசித்திடவே நிறுத்தி
யேனுயிர்கள் பலவிதத்தாற் சத்திகளும் பலவா
யிரவிகதிர் முன்னிருள்போ லருள்பெறினீங் கிடுமே. (ச)

அடல்மேவுஞ் சிவனெங்கு நிறைந்திருப்ப னன்மா
    வப்பொருளை விடான்பழமு மிரதமும்போ லென்றீர்
சடமேவு மலமுயிரைத் தடுப்ப தெங்கே
    சாதகமாய்த் தேசிகனே சாற்று கென்றாய்
கடல்போலுஞ் சிவங்கடலிற் புனல்போலு மான்மா
    கரியமலந் தன்னிரு முப்பும் போலுந்
திடமேவு முப்பந்தக் கடலுக் கில்லைச்
    சிற்றுயிர்க்கே மலமிறையைச் சேர்ந்தி டாவே. (ரு)

இன்னமுங்கே ளாகாயத் தேவாயு நிற்கு
    மிலங்கியநற் கந்தங்கள் றூர்க்கந்த மெல்லாந்
துன்னரிய வாயுவுக்கே யன்றி யந்தச்
    சுடர்விசும்பு தனக்குண்டோ துலக்கியவா வைத்தின்
மன்னுமறி யாமையினு லிதாகிதமாங் கன்ம
    மற்றதனுற் றுக்கசுகம் புசிக்க வேண்டிப்
பின்னுடல்மா யையிலுண்டா முண்டாக வெல்லாம்
    பிணிப்புமுயிர்க் கேயந்தப் பெருந்தகைபா லுளுவே. (சு)

அருளினுயிர் கூடுநெறி முப்பதவ தாமா
    மைம்பூதப் பழிப்புடனே பொறியறநின் றுணர்த
லிறையந்தக் கரணசுத்த கலாதி ஞான
    நிராகரணஞ் சுத்ததத்துவ தூடணமே பிராணன்
பாவுதத் துவரூபத் தரிசனத்தற் சுத்தி
    பலியுறக்கே வலமந்தக் கேவலத்தைக் காண்டல்
விரிகேவ லாதித மாத்ம ரூப
    மிருமான்ம தரிசனம்பின் ஞானதரி சனமே. (எ)

பகர்ஞான நிதமப்பாற் பரைதரிச னஞ்சொற்
    பரையோகம் பரைபோகம் பரையிலதி தந்தான்
றெருசிவனற் றரிசனஞ் சாக்கிரா தீதஞ்
    சுத்தவத்தை சுரூபந் துலங்குசுகா தீதந்
திகழ்சிவப்பே றுத்மசுத்தி பரமா னந்த
    தரிசனம் பின்பரமா னந்த யோக
மகம்பரமா னந்தபோக மாத்ம லாப
    மானந்த மேலீடு செகம்பழித்த லாமே. (அ)

பிறங்குபூ தப்பழிப்புப் பகருங் காலே
    பிருதிவியப் புத்தேயு வாய்வா காய
நிறங்களொன் றுக் கையைந்தாய்ப் பரிணமித்தா லுடம்பா
    நின்றநுபோ கங்களெல்லா முடலாத்மா வென்று
யுறங்கிடுங்கா லறிவிலதா னெருபொறியிற் றுக்க
    வுற்றறியு மென்றாய்பின் னுயிர்போனுற் பிணமாய்ச்
சிறந்துளோர் கட்டையினிற் புரட்டிவிழ்த் துருட்டித்
    தீக்கொளுவச் சுட்டதென்று திரும்பக்காண் கிலையே. (கூ)

பொறியைந்து முயிரென்று மொன்றறிந்த தொன்று
    புக்கறியா தைந்தையுங்கேட் டுண்டுகண்டுற் றுய்க்கு
மறிவொன்றுண் டதுவான்மா வஞ்சறிவாய் விடுமோ
    வவைகரணஞ் செலுத்தியிட வறிந்திடுமென் றறிநீ

செறிகரண நான்குமே தனமென்றுஞ் சடமாய்ச்
சிந்தித்துப் பற்றிநிச் சயித்தெழுந்து நான்காய்ப்
பிறியுங்கா ரகாரவு காமகாம் விந்து
பெற்றறியு முன்னறிவிற் பிரித்துப் பாரே. (௧0)

கலையாதி யான்மாவென் றுரைசெய்தாய் மாயா
காரியமாய்ச் சடமாகிக் கஞ்சுகமா யுயிர்க்குக்
குலையாத தொழிலுமறிந் திடவேணு மன்றங்
கோரறிவு மதிலாசை யுறுவதுவா முணர்நீ
தலையான சுத்ததத் துவமறிவென் றுரைத்தாய்
தகுஞான மாய்க்கிரியை தானுயோ ரிரண்டு
முலையாம லொத்துமதிற் கிரியை யேறி
யுயர்ஞான மேறியும்பின் வருமஞ்சு விதமே. (௧௧)

கருவியெல்லா மொடுங்கிடவு முடலை நீங்காக்
காரணத்தா லான்மாவே பிராணவாயு வென்று
யொருவர்தொட வுசுவாச நிசுவாச மாக
வுடலினின்று முறங்கிடுங்கா லுணராத தென்னே
புரிகரண மொடுங்குதலா லறியா தென்றாய்
பொய்யுடற்கு வேந்தனர் வாயு வானு
லரசனே யமைச்சனின்றிப் பவனி போந்தா
னுருமிது சடமாம்வே றான்மாவுண் டென்னே. (௧௨)

தரையாதி நாதாந்த முப்பத் தாறுந்
தனித்தனியே பருத்தல்நத் துவரூப் மாகு
நிரையாய வடிவுகுணந் தொழில்க ளெல்லா
நினைந்தறிதல் தத்துவத்தின் தரிசனம தாகும்
விரவாதிங் கிவைசடமா மென்று நீங்கல்
விளங்குதத் துவசத்தி மேவியதத் துவங்க
ளொருவியதோ கேவலமிங் கிதுவோகே வலமென்
றுணர்ந்ததுவே கேவலத்தின் றரிசனமென் றுணரே. (௧௩)

கேவலா தீதமது விடிதலுக் குயிருண்ட
கிளர்குமரி யிருட்டப்போல் மடிதலுக்கா யிருண்ட
தாவதுன தறியாமை யகன்றக்கா லறிவா
யாத்மரூ பம்பூத மல்லைபொறி யல்லை
தாவுகர ணங்களல்லை யென்றுநா முணர்த்தத்
தத்துவங்க ணீங்கினையிவ் விருளே தென்றுன்.
மேவியுனை யின்றளவுந் தொடர்ந்தவா ணவத்தை
வியந்திதுவெ னக்கண்ட வறிவுகா ணீயே. (௧௪)

ஆத்மதரி சனமுரைக்கி லுன்னறிவு நீயே
யறிந்துபா ரெனவவைநா னறிந்தவிட மெல்லா
மேற்படநின் றவன்யானே யிவைகண்டு நீங்கல்
வேறுகர்த்தா விலையுடலை நடத்தலுமியா னென்றுன்
சாற்றரிய சிவஞான முனையுணர்த்து மிந்தத்
தத்துவங்க ளூன்வழித்தன் றிவிலுன்கைப் பொருளை
வேற்றொருவன் கவரநின்று வெருவிழிப்ப தல்லால்
வேறுனக்கே துனையுணர்த்தும் விமலனருள் தானே (௧௫)

அருளான விச்சாஞா னக்கிரியா சத்தி
யக்கினியுங் காட்டமும்போற் சுத்ததத்து வத்தைப்
பிரியாதே பிரேரிக்க வினிச்சிவதத் துவங்கள்
பெருகுமந்திரம் பதம்வன்னம் புவனந்தத் துவங்கள்
மருவுகலை யெனவா றத்துவாக்க ளாயும்
மந்திரேசர் பதேசர்வன் னேசர்புவ னேச
ரரியதத்து வேசர்க லேசர்களு மாகி
யதோமாயை யாய்நிறைந்த கலாதிகளை யினையும் (கசு

எழிடமாய் நின்றுநடத் திடல்சுத்த மாயை
யெழில்வாக்கு நாலாகி வசனாதி விரிக்கத்
தாழ்வில்சூக் குமபஞ்சாக் கரத்தி னாலே
தருகாணங் களையுமெழுத் தலவாயவவ் வவரால்
விழ்பொறிபூ தங்களையு நடத்த விந்த
விரிவெல்லாம் பதங்கள்புவ னங்கள்கலை கலந்து
வாழ்வுபெறத் தனித்தனிநின் றியக்க விந்த
வகையுலகந் தொழில்பட்டு வருதல்சிவன் றொழிலே. (கஎ)

என்றுமரு ளான்மாவை நடத்தல் கேளா
யிந்திரியங் களையுமந்தக் கரணங்க டமையு
நின்றறிய வுயிருணர்த்த வறிந்துடனாய் நிற்கு
நெறிபோல வுயிர்ப்போத மறிவிக்க வறித
லன்றியே சிவபோத முடனாய்நின் றுணர்த்த
லாதலா லருளன்றி நமக்கொர்செய லிலைநா
மின்றளவு நமதுதொழி லென்றதெல்லா மருளே
யென்றுருகி யவ்வருளைப் பிரியாம லிருநீ. (கஅ)

அறிவுபற்றி நீயிருந்தால் விடியற் காலத்
தருணவுத யம்போல வரவுகதிர் விழுங்கிப்
பிறியுமா போலவொளி மெல்ல மெல்லப்
பெருகுங்காண் மனக்கவலை யற்றுக் காண
வுறுதிரோ தாயிமறைத் துனக்குக் காட்டு
மொளிஞான தரிசனமா மசபைவிந்து நாதம்
பெறுமாதா ரங்கள்பிர சாதவேதா கமங்கள்
பின்யோகத் தாலொளிகள் பெறிற்பிறப்பாய் விடுமே. (ககூ)

உலவியஞா னாதிகஞ் சிவஞா னத்தி
னுள்ளொடுங்கி யதன்வசமா யுன்வி காரம்
பலவுமற விருந்தலாம் பரைதரிச னங்கேள்
பகர்ஞான மிருந்தனிற் புக்கவொளி யெங்கு
நிலவியே பொதுவாக நிறைசெழுங் கதிரோ
னீடொளியுச் சிக்காலத் தெங்குநிரந் தரமாய்க்
குலவுதல்போற் புரையறநின் றிடுத லாகுங்
கூறியவிப் பரையில்வியாத் தம்புகலக் கேளே. (உ0)

சாற்றுபரை திரோதைமுத லனேகமரு வுருவாஞ்
சத்திகளாய்ச் சிவனுக்கும் வடிவாகிக் கரணந்
தேற்றுகுண மிந்திரியந் தொழில்க ளாகிச்
சேர்ந்தசாங் கோபாங்க மாகியிருப் பிடமாய்ப்

போற்றரிய சரிரிக்கிவ் வுலகமா யளிக்கும்
பொருளாகிப் பீடலிங்க மாதல்பரை வியாத்த
மாற்றரிய பரையினுறை யாதுநெகி ழாத்தன்
வசமாய்த் தனைமறைய நிற்றல்பரை யோகம். (உக)

கண்டயோ கப்பயனல் விளங்குமணி யோசை
கடலோசை யாழோசை சேகண்டி யோசை
வண்டோசை மதயானை பிளிற்றோசை நாத
வகையோசை கொம்போசை வந்து தோன்றி
யுண்டான பரைபோகம் பரையிலதீ தந்தா
னோசையெல்லா மழிவதறி னுறுதியிருப் பதுவா
மன்றுசிவ தரிசனமிக் கேடுபடா விமல
வளரொளிக்கு ளொளியாகச் சிவத்தைக்காண் பதுவே. (உஉ)

சொன்னபரை யொழியவொரு பொருளுண்டோ விந்தச்
சுடரொளிக்குள் ளொபுறம்போ விதனெனுகூ டிடுமோ
வென்னெனவே திகைத்திடுதல் சாக்கிரா தீத
மிதிலவத்தை யைந்துண்டு சுத்தவத்தை யாகு
மன்னுரவ மாதல்சிவ விழப்பு மாயை
வாய்த்ததனு கரணபு வனபோக மாகுங்
கன்மமறப் பரவசமாய்த் துக்கசுகங் காட்டுங்
கருதுமா மாயையைந்து காரணற்கு மெய்யாய். (உங)

அத்தகுமா யையைநடத்துந் திரோதைமறைந் துலகை
யமைந்தூட்டு மலமைந்துங் காட்டும் ஞான
சத்தியிட மாகப்பூ ரணபோக மாய்நிற்றல்
சாக்கிரம்பூ ரணபோக நிருவிகா ரமதாய்ச்
சுத்தபரை முதலாத னிர்மலசொற் பனமாந்
தூயபரை போகத்திற் (றற்)போதமற வழுந்த
லொத்தநிர் மலசுழுத்தி பரைபோக மழித்தெழுந்த
துயர்பரமா னந்தத்தின் முதலாதல் துரியம். (உச)

பரமானந் தந்தனிலே சுட்டறநின் றதுவாய்ப்
பார்த்திடனின் மலதுரியா தீத மாகு
மருட்பரைக்குஞ் சிவத்துக்கு முவமை கூறி
லாதித்தன் சிவன்போலு மதன்கிரணம் பரையா
நிறைமனவாக் கிறந்தசிவ மதனினுறை யாது
நெகிழாதுன் போதமற நின்றவிழ விருந்த
லரியசுக ரூபமதி லாகா யத்தே
யனிலமடங் குதல்போலுன் போதமற நில்லே. (உரு)

நின்றபோ தவ்வொளிதோன் றிடுமந்த நிலையி
னீக்கமற நின்றதுவே சுகாதீத மாகு
மென்றுமது பாவித்தல் பாவனைவிட் டிருத்த
லிவையாகா நேரென்று நேர்பெறினு மாகா
வொன்றியுறைத் திடலாகா வுறைப்புவிட லாகா
வுயிருமதன் வசத்தென்னி லிரண்டாகு மதனு
லென்றிடலுஞ் ஞானமா மெல்லாகா மென்று
விகலாத்ம வாதமா மிவையொழித்துப் பாரே. (உசு)

நிரவிந்த முறையிருந்தாற் சிவம்பிரகா சிக்குஞ்
சிவப்பே ருத்மசத்தி செப்புங் காலை
யாருயிரஞ் ஞானத்தே கூடிடிலஞ் ஞானி
யதுதானித் திரையாகு மவ்வுயிர்சத் தோடே
சார்வுறசத் தாகுமிது பரையுணர்சாக் கிரமாஞ்
சத்துமசத் தும்புணர்ந்தாற் புருட ரூபஞ்
சோர்வறவித் நிலைக்குள்ளே யுண்டாம்போ தத்தைத்
தோற்றுவியா மற்காணப் பட்டவொளி தொடர்ந்தே. (உஎ)

அந்தவொளிக் குள்ளடங்கி யதிதப்பட் டுறங்கா
தமுந்தினி கண்டசிவத் தின்பசத்தி யெனலாய்
முந்துசுகா தீதமாஞ் சுகாதி தத்தின்
முயன்றுபயின் றிடிற்சிவப்பே ருருகுமிது காண்டல்
வந்திடுங்கா ளுத்மசுத்தி யிதுசிவப்பே ருரு
மற்றதுபெற் றேருமென்று கருதாதெள் ளளவுஞ்
சிந்தைநினை வற்றெழுந்து சித்திரமே போலத்
திரையற்ற தெள்ளமுதக் கடல்போலுஞ் சிறந்தே. (உஅ)

அன்புருகி யுரையாது நெகிழாது பற்று
ததனைநிலை தெரியாதங் கமுந்தில்மகத் தான
வின்பசுக மேபாமா னந்ததரி சனமா
மிவைதெரிய வுருக்கினபொன் போற்சலன மின்றும்
பின்புபர மானந்த யோகநிறை நீரிற்
பெருகவிழித் தவர்க்குநிலந் தோன்று மாபோ
லொன்றவுரு கியசெம்பிற் களற்பொறிதோன் றுவபோ
லுளதறிவிற் செருக்கற வானந்த முதிக்கும். (உகூ)

நிடுபர மானந்த போகமுயிர் சிவத்தே
நிற்குநெறி யானைவழு மான்மாவும் போலத்
தாடலைகா றலைபதத்தின் றன்மை போலுஞ்
சாற்றிலொன் ருகாவி ரண்டுதானு மாகா
நாடியிரண் டொன்ருகா வதன்வசமா யின்ப
நலம்பெறலா நாவிரதம் புசிக்குங் காலை
கூடியகா விரதமோ விரதகா வாமோ
கொண்டிக்த காவருந்தல் போலாத்ம லாபம் (௩௦)

அன்றலர்ந்த பூவின்மது நிறைய வாரி
யாவலுட னுண்டவண்டு பூவையலை யாம
னின்றதிலே யுறைகின்றே மென்பதற மயங்கு
நெறிபோலத் தேகவிகா ரங்க ளிங்கிச்
சென்றுதெளி வுற்றவச முற்றந்தப் பொருளைச்
சேர்த்தபோ துனைவிழுங்குந் திரும்பவிடா திதுவே
நின்றபர மானந்த மேலிடா மித்த
நிலைநின்றோர் சாயுச்சிய நிலையி னரே. (௩க)

---

[குறிப்பு :—இந்நூல் இதுவரை அச்சிடப்படவில்லை. இதன் மூலம் இலக்கண விளக்க பரம்பரை திரு. சோமசுந்தர தேசிகர் அவர்களால் அன்புகூர்ந்து உதவப் பெற்றது.]

# சின்முத்திரை*

[தூத்துக்குடி திரு. ந. சிவகுருநாதபிள்ளை அவர்கள்]

சின்முத்திரை யென்றால் சித்+முத்திரை அதாவது ஞானத்தைக் காட்டும் அடையாளம் என்று பொருள்படும். இதைக் கைகாட்டு என்றும் சொல்லுவர். ஏனென்றால் இந்த அடையாளத்தை தக்ஷிணாமூர்த்தி யோகவடிவாய் இருந்து சனகாதி முனிவர்களுக்குக்காட்டி அவர்கள் சந்தேகங்களை நிவர்த்தி செய்தார். அதனால்தான்,

“கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்”

என்னும் திருவிளையாடற் புராணப் பாட்டு எழுந்தது. சிவபெருமானுக்கு இந்த யோக வடிவம் தவிர, போக வடிவம், வேகவடிவம் ஆகிய வேறிரு வடிவங்களும் உண்டு என்று சிவஞான சித்தியாரில் “போகியாயிருந்து” என்னும் தொடக்கத்துச் செய்யுளால் அறிகிறோம். ஆகவே அவரது மூன்று வடிவங்களுள் இந்த யோக வடிவமே சிறந்த வடிவம். கச்சியப்பமுனிவரும்,

“மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர்-அம்மலர்த் தாள்நிழல் அடங்கு முண்மை
கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய - செம்மலை யலதுளம் சிந்தி யாதரோ” [யைக்

என்னும் செய்யுளால் சின்முத்திரையை விளக்கி யிருக்கிறார்.

சின்முத்திரை யென்பது வலது கையால் அதன் பெருவிரலையும் அதன் சுட்டு விரலையும் ஒன்றாய்ச் சேர்த்தும், மற்ற மூன்று விரல்களை நீட்டியும் காட்டும் அடையாளம். அப்போது, சாதாரணமாய்த் தனித்து நிற்கும் பெருவிரலானது தனக்குப் பக்கத்திலுள்ள சுட்டு விரலை மற்ற விரல்களினின்றும் நீக்கி, தன்னுடன் சேர்த்துக்கொள்ளும். அதனால் பெருவிரலாகிய இறைவன் சுட்டுவிரலாகிய ஆன்மாவை மற்ற மூன்று விரல்களாகிய ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களினின்று நீக்குவன் என்று அறிகிறோம். இந்த ஆணவாதி மலங்கள் பாசம் என்றும், உயிரானது பசு என்றும், இறைவன் பதி என்றும் சித்தாந்தத்தில் வழங்கப்படும். எனவே, சின்முத்திரையானது பதிபசு பாசங்களின் இலக்கணத்தையும், பசு செய்ய வேண்டிய சாதனங்களையும், அது அடையும் பயனையும் விளக்கும் குறியாகும்.

பதியானது இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கி யிருப்பதுடன் அநாதியாக உயிர்களை வருத்தும் பாசத்தை அறுவித்து உயிர்களைத் தன் வயமாக்கும். மேலும் பாசமானது உயிரைச் சார்ந்திருக்குமே யொழிய இறைவனை எஞ்ஞான்றும் சாராது என்பது கடைசி மூன்று விரல்கள் பெருவிரலுக்கு அடுத்து இராமல், உயிராகிய சுட்டுவிரலை அணித்தே கொண்டுள்ளதால் அறிகிறோம். மற்றும் உயிரானது பாசத்தினின்றும் நீங்கினால் இறைவனைத்தான் சேரும்படி இருக்கும். “பாசம் கழன்றால் பசுவுக்கிடம் பதியாம்” என்பது இங்கு கவனிக்கத்தக்கது.

நம்முடைய சைவ சமயம் இயற்கைக்குப் பொருத்தமாகவே இருக்கிறது. சில மதத்தினரைப்போல் நாம் உலகத்தைப் பொய்யென்று சொல்லுகிறதில்லை. கண்ணானது இருளைவிட்டு நீங்கவேண்டுமானால் அதற்கு ஒளி

---

*இது இராயப்பேட்டை பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின் “குகாநந்த நிலயத்தில் சமாஜ ஆதரவில் 1933ஷு ஜனவரிமீ 8உ மாலை திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமையில் திரு. ந. சிவகுருநாதபிள்ளை அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம். எனது கைக்குறிப்புகளைக் கொண்டு எழுதினேன்— G. கலியாணம், B. A. Dip. Ec., சமாஜ உதவிக் காரியதரிசி.

அவசியம்; எனவே கண்ணனது ஒளி இருள் என்ற இரண்டிற்கும் வேருக இருக்கமுடியாது. அதுபோல் உயிர் மல இருளினின்றும் நீங்கவேண்டுமானல் இறைவனுடைய அருள் ஒளியுடன் சேரவேண்டும்.

"ஊசல் கயிறற்ருற் ருய்தரையே யாந்துணையான்"

என்ற சிவஞான போதக்கூற்று இங்கு குறிக்கத்தக்கது.

உயிர் தனித்து நிற்கும் தன்மையுடையதல்ல; நீ தனித்து நில்லாதது போல், "இரண்டு மிலித்தனியனேற்கே" என்று திருவாசகம் திருச்சதகத்தில் சொல்லியிருப்பது அது சத்துமல்ல, அசத்துமல்ல என்பதைக் காட்டுகின்றது. ஏனென்ருல் "சார்ந்ததன் வண்ணமாதல் என்னுமதன் தன்மையினுல்" அது அசத்தோடு சேர்ந்திருக்கும்போது அசத்தாயும், சத்துடன் சேர்ந்திருக்கும்போது சத்தாயும் விளங்கும் என்பதைக் குறித்து அதற்கு சதசத்து என்ற பெயர் வந்தது. அது மலத்தினின்றும் நீங்கி இறைவனெளியைச் சார்ந்திருப்பதற்குச் சாதனங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன. இவை "அரும்பு மலர் காய்கனிபோல்" என்று தாயுமானவர் அருளிய "விரும்புஞ்சரியை...." என்னும் தொடக்கத்துப் பாட்டால் அறிகிருேம்.

இறைவனுடைய இலக்கணத்தைத் தடத்தம் என்றும், சொருபம் என்றும் பிரிக்கலாம். தடத்தம் என்பது உயிர்களின் பொருட்டு மேற்கொள்ளும் நிலை; சொருபம் என்பது அவனுடைய உண்மையான நிலை. அதாவது சத்து, சித்து, ஆனந்தமாய் விளங்குவது. நம்பொருட்டாக இறைவன் அருவம், உருவம், அருவுருவம் ஆகிய திருமேனிகளைக் கொண்டு தடத்தலக்கணத்தால் விளங்குகிருன். அந்த நிலைதான் நாம் வழிபடுதற்குரிய நிலை. அப்போது அவன் நமக்குத் தாயினும் சிறந்த கருணை பாராட்டி, ஆணவமாகிய கருவறையினின்றும் தனுகரண புவனபோகம் ஆகிய மாயையின் உதவியால் நம்மை மீட்டு, ஈடேறும்படி செய்கிருன். "காருற்ற ஆணவ...." என்னும் தாயுமானவர் பாட்டும், "பால் நினைந்தூட்டும் தாயினும் சால...." என்னும் திருவாசகச் செய்யுளும் இங்கு கவனிக்கத்தக்கன. இறைவனது அருவுருவம்தான் இலிங்க நிலை. இந்த இலிங்க வழிபாடு முன்பு உலகம் முழுவதிலும் இருந்தது. இறைவனுடைய உருவம் குரு, ஆலயம், சங்கமம் ஆக விளங்கும். அவனுடைய அருவம் யோகிகளுக்கு உரியநிலை. ஆனல் ஞானிகளும், யோகிகளும்கூட ஆலய வழிபாடு செய்யலாம்.

உயிரானது இறைவனைப் பற்றுவதற்காக உலகப்பற்றை விடவேண்டும்.

"பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு"

உயிர் இன்பத்தை அடைய வேண்டுமானல் இறைவனடியைச் சேரவேண்டும்.

"வேண்டுதல் வேண்டாமை யி லானடி சேர்ந்தார்க்கு
யாண்டு மிடும்பை யில"

என்பது தமிழ்மறை.

மேலே கூறிய சின்முத்திரையில் சுட்டுவிரலுடன் கட்டைவிரல் சேர்ந்து உண்டாகும் வட்டவடிவம் அவை ஒன்று இரண்டு என்று சொல்லவொண்ணுத நிலையைக் காட்டும்; அதாவது அத்துவித முத்தியைக் காட்டும். சித்தாந்தத்தின்படி ஒரு பொருள் எப்பொழுதும் இன்னெரு பொருளாகமாருது. உயிர் தூல சித்தென்றும், இறைவன் சூக்கும சித்தென்றும் சொல்லுவர். இரும்பாலும் ஒன்ருகச் சேர்வதுபோல் உயிரும் இறைவனும் சேர்ந்திருக்க வேண்டும். உயிர் இறைவனைச் சேர்ந்திருக்கும் போது சதா ஆனந்தத்திலிருக்கும். இனம் இனத்தோடாதலின் உயிர் எக்காலத்தும் மலமாகிய சடத்தோடு

கூடாது; அறிவுப் பொருளாகிய இறைவனோடு கூடும். இப்படிச் சோாத முத்தி பதமுத்தி யென்பர்; அதாவது உயிர் அப்போது சிவ உலகத்தில் தான் செய்த சரியை, கிரியை, யோகத்தின் பலனைத்துய்க்கும். ஞான நிலையில்தான் அத்துவித முத்திகிட்டும். அந்த ஞானமாவது எப்பொருளையும் ஆக்குபவன் ஈசனே யென்றும், யாவற்றையும் இயக்குபவன் இறைவனே யென்றும் அறிந்து தன் செயலற்றிருத்தல். அது மகாவாக்கியத்தைக்கேட்டு, சிந்தித்து, தெளிந்து, நிட்டையில் அமர்வதால் ஏற்படும். இவ்வாறு தக்ஷிணாமூர்த்தியால் சந்தேக நிவர்த்தி செய்துகொண்ட நால்வர்களும் நிட்டையிலிருந்து ஆனந்தம் அனுபவித்தனர் என்று அறிகிறோம்.

# தமிழ்நாட்டுச் சைவ இளைஞர் மகாநாடு

[மறை - திருநாவுக்கரசு]

## சென்னையில் கூட்டம்

### தீர்மானங்களின் விவரம்

இம்மகாநாடு 22-1-33-ல் மாலை 3-30 மணிக்குச் சென்னை பச்சையப்பன் கல்லூரி மண்டபத்தில் கூடியது. உள்ளூர் வெளியூர்ப் பிரதிநிதிகளும், ஆதிதிராவிடத் தலைவர்களும், சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் நிர்வாக சபையார் சிலரும், சைவ மெய்யன்பர்களும் மண்டபத்தில் கூடி யிருந்தனர். கடவுள் வணக்கம் சென்னை ஸ்ரீமதி தேவாரம்மாளால் மிக இனிமையாகப் பாடப்பட்டது.

பின்னர் ஸ்ரீமான் ஜே. சிவசண்முகம் பிள்ளை, எம். ஏ., (சென்னை நகர சபை உறுப்பினர்) மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசினார்.

அதன் பின்னர் சைவத் திருவாளர் சுவாமி வேதாசலம் அவர்களின் புதல்வரும், சென்னை நுங்கம்பாக்கம் கார்ப்பொரேஷன் ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதருமான சைவத் திருவாளர் வித்வான் மறை திருநாவுக்கரசு பிரதிநிதிகளை வரவேற்று ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர்.

பிறகு சைவ மெய்யன்பரும் செந்தமிழ் அறிஞரும் ஆன சைவத் திருவாளர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, எம். ஏ., பி. எல்., (சென்னை நகரசபை அங்கத்தினர்) தலைமை வகிக்க வேண்டுமென தமிழ்நாட்டைச் சேர்ந்த பற்பல ஜில்லாக்களிலிருந்தும் வந்த பிரதிநிதிகள் தங்கள் தங்கள் ஜில்லா சார்பாகப் பிரேரித்தும் ஆமோதித்தும் ஆதரித்தும் பேசினர். பிறகு ஸ்ரீமான் பிள்ளையவர்கள் விசேஷ கரகோஷத்துக்கிடையே அக்கிராஸனத் தமர்ந்தார்கள்.

அவருக்கு வரவேற்புப் பத்திரம் ஒன்று வாசித்தளிக்கப்பட்டது. அவர் அப்பத்திரத்துக்குப் பதிலளித்துப் பின்னர் தமது தலைமைப் பேருரையை நிகழ்த்தினர்.

பின்னர் மகாநாட்டில் கீழ்க்காணும் தீர்மானங்கள் ஒரே மனதுடன் நிறைவேறின. அவை வருமாறு:—

(1) தூய்மையுடன் சிவ சின்னங்கள் அணிந்து சைவப் பற்றுடன் வரும் ஆதி இந்துக்கள் உள்ளிட்ட யாவர்க்கும் யாதொரு தடையுமின்றி சைவ சமயக் கொள்கையின்படி ஆலயப் பிரவேச உரிமை உண்டென்று இம் மகாநாடு தீர்மானிக்கின்றது.

(2) ஆதலின் சைவ சமயக் கோவில்களை ஆதி இந்துக்கள் உள்ளிட்டவர்கட்கு உடனே திறந்து விடும்படி அவ்வக்கோவில்களின் பாதுகாப்பாளர்களை (தர்மகர்த்தர்) இம்மகாநாடு வேண்டிக் கொள்கின்றது.

(3) சைவ ஆதி இந்துக்களுடன் ஒருங்கிருந்து சைவ உணவை ஏனைய சைவ இந்துக்கள் உண்பது சைவ சமயத்திற்கு உடன்பாடென்றே இம்மகாநாடு தீர்மானிக்கின்றது.

(4) ஆதி இந்துக்கள் திருக்கோவிலில் நுழைந்து இறைவனை வழிபடுதற்குத் தனியான நேரம் ஒதுக்கப்படுவது முறையல்ல என்று இம்மகாநாடு தீர்மானிக்கின்றது.

(5) 1933-ம் வருஷம் ஜனவரிமீ 3-நாள் புரசைவாக்கம் மு. சி. த. பங்களாவில் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீமத் சங்கராச்சார்ய சுவாமிகள் செய்த விரிவுரையில் "மாமிசம் உண்பதும் பசு முதலிய உயிர்களை யாகத்தின் பொருட்டுக் கொல்லுவதும் இந்து சமயத்திற்கு உடன்பாடாகும்" என்று கூறியதை இம்மகாநாடு பலமாகக் கண்டிக்கின்றது.

(6) ஆதி இந்துக்கள் உள்ளிட்டோரின் திருக்கோவில் நுழைவை ஆதரித்து இந்தியா சட்டசபையில் ஸ்ரீமான் ரங்கய்யரும் சென்னைச் சட்டசபையில் டாக்டர் சுப்பராயன் அவர்களும் கொண்டுவர இருக்கும் தீர்மானத்திற்குத் தடையின்றி உடனே அனுமதி கொடுக்குமாறு மேன்மை தங்கிய அரசப் பிரதிநிதி அவர்களை இம்மகாநாடு கேட்டுக் கொள்கின்றது.

(7) மேற்படி தீர்மானம் ஏனைய சட்டசபைகளில் வருங்கால் அவ்வச் சட்டசபைகளிலுள்ள பிரதிநிதிகள் அதனை ஆதரிக்க வேண்டுமென்று இம்மகாநாடு அவர்களை வேண்டிக் கொள்கின்றது.

ஆதி இந்துக்களின் திருக்கோவில் நுழைவை ஆதரித்து நிறைவேற்றியுள்ள தீர்மானங்களை மகாத்மா காந்தி, இராஜப் பிரதிநிதி, அகில இந்திய தீண்டாமை விலக்குச் சங்கக் காரியதரிசி, தமிழ்நாடு தீண்டாமை விலக்குச் சங்கக் காரியதரிசி, ஏனைய மாகாண தீண்டாமை விலக்குச் சங்கக் காரியதரிசிகள், டாக்டர் சுப்பராயன், சி. எஸ். ரங்கய்யர் ஆகியவர்களுக்கு அனுப்பி வைக்கும்படி இம்மகாநாடு தலைவர்கட்கு உரிமை தருகின்றது.

---

# நரகத்தைப்பற்றிய ஆராய்ச்சி

[கு. வைத்தியநாத முதலியார், ஆசிரியர், போர்டு ஸ்கூல், கூவம்.]

திருவிற்கோலத்தில் நடந்த சமாஜ ஆண்டு விழாவில் திரு. ஈ. த. இராஜேசுவரியம்மையார் "சைவத்தின் சிறப்பியல்பு" என்பது பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அது "சித்தாந்தம்" 6-வது மலரில் 19-வது பக்கத்தில் வெளிவந்துள்ளது. அதில் சைவ சித்தாந்தத்துக்குப் பொருத்தமற்ற சில கொள்கைகள் வெளிவந்துள்ளன. இக்கட்டுரை அப்பொருந்தாக் கொள்கையை விளக்கிச் சைவ உண்மையைத் தெரிவிக்கவே எழுந்ததென்பதையும் இக்கட்டுரை அம்மையார் மீது குறைகூறும் நோக்கத்தோடு எழுதப்படவில்லை யென்பதையும் முதன் முதலாகத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அம்மையார் கீழ்வரும் கொள்கைகளைத் தெரிவித்துள்ளார் :—(1) நமது சமயமோ நரகத்தைப்பற்றிக் கூறுகின்றதாயினும், அது அன்பே உருவான சிவத்தினுடைய சிருஷ்டியென்று எண்ணவில்லை. (2) நமது கடவுளுக்குத் தண்டனைகள் விதிக்கும் நியாயாதிபதி வேலையையும் அவைகளை நிறைவேற்றும் சிறைச்சாலைத் தலைவன் வேலையையும் நமது சமயம் கொடுக்கவில்லை. (3) நரகம் சிவன் சிருஷ்டியன்று ஜீவன் சிருஷ்டியெனப்படும். (4) நரகமானது பாவிகள் உறையும் வேறு உலகமென்று எண்ணப்படவில்லை. (5) ஒருவன் செய்த குற்றத்திற்கு அவனை அது மறக்கப்பட்ட பல காலத்திற்குப் பிறகு

தண்டிப்பது நீதியன்று. (6) தண்டனை கொடுப்பதாயின் குற்றம் செய்த வுடனே தாமதமின்றிக் கொடுக்கவேண்டும். (7) குற்றத்துக்கு தண்டனை பல காலத்துக்குப் பிறகு கொடுக்கிறுரென்பது யுக்திக்குப் பொருந்தாது. (8) நரகம் ஒவ்வொரு சீவனும் தன் தன் பாவத்தினுல் சிருட்டித்துக் கொள் வதேயன்றி சிவன் செயலால் வருவதன்று. (9) ஒருவன் செய்த பாவம் அவனை அப்பிறவியிலாவது அடுத்த பிறவியிலாவது தொடரும். இம்மையி லேயே சுவர்க்க நரகங்கள் உலக வாழ்க்கையில் கலந்திருப்பதை நாம் பிரத்தி யக்ஷமாகக் காண்கிறேம்.

மேற்கூறிய ஒன்பது கொள்கைகளும் திட்டமாக மறுக்கற்பாலன. அவைகளை மறுத்து எனது மறுப்புக்கு ஆதாரமான மேற் கோள்களையும் கீழே காட்டுகின்றேன்.

(1) நரகம் சிவபெருமானுடைய சிருட்டியே. இறைவன் சிருட்டியில் அகப்படாத உலகம் ஒன்று இருப்பதாகக் கொள்வது அவனது முதன் மைக்கு இழுக்காய்முடியும்.

"படைத்தளித் தழிப்ப மும்மூர்த்தி களாயினை" (சம்பந்தர்)

"எல்லா வுலகமு மானுய் நீயே" (அப்பர்)

"நீயலாற் பிறிது மற்றின்மை ஒன்றுநீயல்லை அன்றி ஒன்றில்லை"-(மாணிக்க வாசகர்)

முதலிய வாக்குகளை நோக்குக. நரக துன்பத்தை ஏற்படுத்ியது கடவுளது அருளுக்கும் அன்புடைமைக்கும் இழுக்கன்று.

"தந்தைதாய் பெற்றதத்தம் புதல்வர்கள் தஞ்சொலாற்றின்
வந்திடா விடிலுறுக்கி வளாரினு லடித்துத்தீய
பந்தமு மிடுவரெல்லாம் பார்த்திடிற் பரிவேயாகும்
இந்தநீர் முறைமையன்றே ஈசனர் முனிவுமென்றும்;"

"மண்ணுளே சிலவியாதி மருத்துவன் அருத்தியோடும்
திண்ணமாய் அறுத்துக்கீறித் தீர்த்திடுஞ் சிலநோயெல்லாம்
கண்ணிய கட்டிப்பாலுங் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்
அண்ணலும் இன்பதுன்பம் அருத்தியே வினையறுப்பன்."

என்ற சித்தியார் பாக்களும் பிறவும் இதனை வலியுறுத்தும்.

(2) நமது கடவுளுக்கு நீதிபதி வேலையும் சிறைச்சாலைத் தலைவன் வேலையும் உண்டு. உலக நீதியிலும் வேறு வேறு அதிகாரிகள் இவற்றைச் செய்யினும் அவர்கள் அரசன் ஏவல் வழி நிற்றலால் அவர்கள் செயலை மக் கள் அரசன் செயலாகவே கொள்வர். ஆதலாற்றான் சிவபெருமானைக் "கூற்றுவன்காண்" என்று அப்பர் துதித்துள்ளார்.

(3) நரகம் சிவ சிருட்டியல்ல. ஆன்மாக்களுக்குச் சிருட்டியாதி தொழில் கள் சைவசித்தாந்தத்தில் யாண்டும் கூறப்படவில்லை. சுத்தாவத்தையிலுள்ள முக்தான்மாக்களே சிவாநுபவம் ஒன்றற்கே உரியர் சிருட்டியாதி பஞ்சகிருத் தியங்கட்கு உரியரல்லரெனின், மும்மல வயப்பட்ட பாவிகள் நரகத்தையோ வேறெதையோ எவ்வாறு சிருட்டிக்க இயலும்?

(4) நரகம் பாவிகள் உறையும் வேறு உலகமேயாம். தேவாரத்திலும் திருமந்திரத்திலும் சிவஞான சித்தியாரிலுமுள்ள பல குறிப்புகள் இதனை நன்கு வலியுறுத்தும்.

(5) குற்றம் செய்தமைக்குப் பல காலங்கழித்து தண்டனை விதித்தலில் இழுக்கில்லை. ஒருவன் கீரை, கத்தரி, தெங்கு முதலிய பயிர்களைச் செய்யுங் கால், தொடங்கியது ஒத்த காலமாயினும் பலனைப் பெறுவது வேறு காலங்

கனியேயாம். இரை மிக விரைவிலும், தெங்கு பல ஆண்டுகள் கழித்தும் பயன் தரும். தகப்பன் தென்னை மரம் வைத்தால் பிள்ளையே அதன் பயனை அனுபவிக்கத் தொடங்குவதுமுண்டு. எல்லாம் பக்குவத்தைப் பொறுத்தது. இறைவன் பக்குவமறிந்து உயிர்கட்கு இன்பதுன்பங்களை ஊட்டுகிறான்.

(6) குற்றம் செய்த வுடனே தாமதமின்றி தண்டிக்க வேண்டுமென்பதில்லை.

(7) தாமதித்துத் தண்டித்தல் யுக்திக்குப் பொருத்தமானதே. "அரசன் அன்று சாதிக்கும் தெய்வம் நின்று சாதிக்கும்" என்ற பழமொழியை நோக்குக.

(8) ஒவ்வொரு சீவனும் தன் பாவத்தினால் நரகத்தைச் சிருஷ்டி செய்து கொள்கின்றதென்பது மேலே 3-வது தலைப்பில் கூறிய காரணங்களால் பொருந்தாது.

(9) இம்மையில் சுவர்க்க நரகங்களில்லை. பிராரத்த கன்மத்தை அநுபவிக்க வேண்டியது மட்டும் இம்மையி லன்றி வேறில்லை. ஆகாமிய சஞ்சிதங்களையே சுவர்க்க நரகங்களிலும் மற்றைப் பிறவிகளிலும் அநுபவிக்க வேண்டும். எனவே, சுவர்க்க நரகங்கள் இம்மையிலில்லை.

## மறுப்புக்கு விடை

[ஈ. த. இராஜேசுவரியம்மாள்]

தத்துவ ஞானவழியில் விளக்கும் (Philosophical) சைவத்திற்கும், புராணச் (Puranic) சைவத்திற்கும் உள்ள பேதத்தை முதலியார் அவர்கள் நினையாமையே, அவர் மறுப்புக்கு அடிப்படையாய் நிற்கின்றது. புராணச் சைவமானது கதைகள் வாயிலாய்ச் சைவத்தை விளக்கும். அக்கதைகள் பெரும்பாலும் நீதிபோதனைக்காக உண்டாக்கப்பட்டன (Parables) என்பதே ஆன்றோர் துணிபு. உதாரணமாக, திரிபுரசங்கார உண்மை மும்மல அழிவைக் காட்டும். அவ்வாறு புராணகதைகளால், சைவபோதனை செய்தல் கீழ்அறிவை மேலேற்றுவதால், நமது சமயகுரவர்களும் அதைக் கௌரவம் செய்தனரன்றி, அந்தரங்கமான பொருள் அறியாது அக்கதைகளையே உணர்த்தப் பதிகங்கள் பாடிலர். அவற்றுள் ஒன்று, நமது சைவத் திருமுறைகளில் எடுத்துக் கூறும் நரகமாம். அவற்றை உருவகமாகக் கொண்டுணர்வதே அறிஞர் கடனன்றி, அறிவும் நாகரிகமும் மிக்க இக்காலத்தில் உருவகங்கள் அவை அல்லவென்றும் உண்மையில் ஸ்தாபிக்கக் கூடும் பொருள்களென்றும் நிரூபிக்க ஆரம்பித்தல் நமது சைவதத்துவ ஞான ஒளியைப் புறச்சமயத்தார் காணாதவண்ணம் மறைக்கும் ஒரு படலமாக முடியும்.

(1) இறைவன் சிருஷ்டியில் அகப்படுவனவற்றிற்கும், இறைவன் சிருஷ்டிக்குமுள்ள பேதம் முதலியார் அவர்கள் நினைவிலில்லை. ஞானச் சுடராகிய பதி அவர் சிருஷ்டித்த உலகங்கள் எங்கும் இருப்பவராயினும், அவ்வுலகங்களில் பாசமானது அநாதியாய் நின்று வருகிறது. அப்பொருள், இச்சுடரொளியிருந்தும் பெரும்பாலும் நிகழ்காலத்தில் அகலவில்லை. ஆயினும் இது இறைவன் முதன்மைக்கு இழுக்கன்று. அங்ஙனமே, நரகமும் பாசத்தில் உண்டாகும் ஒரு மலராம், இது இறைவன் சிருஷ்டி யென்பது அறுவகை மதத்திற்கும் சம்மதமாகாது. "படைத்தளித்தழிப்ப," மும்மூர்த்திகளாயினை என்று சம்பந்தர் கூறியது, பாசத்தையும் நரகலோகத்தையும் சிவ

பெருமான் சிருஷ்டித்தார் என்கின்ற கருத்து பற்றியன்று. மணிவாசகப் பெருமான், "நீயலாற் பிறிதுமற்றின்மை" என்பதால், சிவபெருமானும், நரகலோகமும் ஒன்றென்று முதலியார் அவர்கள் கொள்வார்போலும்! தமது சங்கல்பத்தாலே யாவையும் சிராக்கும் சிவபெருமானைக் கட்டியைச் சத்திரம் செய்யும் மருத்துவனுக்கு முதலியார் அவர்கள் ஒப்பிடுகின்றார். அவ்வாறு செப்பப் புராணக் கதைகள் வழிகாட்டினும், அவற்றின் நீதியை மாத்திரம் கிரகிப்பதே நலம்.

(2) தண்டனை விதிக்கும் நியாயாதிபதி வேலையும், தண்டனையை நிறைவேற்றும் சிறைச்சாலைத் தலைவன் வேலையும் சிவபெருமானுக்கு முதலியார் அவர்கள் கொடுப்பதைக் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் காண்பார்களாயின், அது நமது சமயத்தை அவர்கள் ஏளனம் செய்யப் போதுமான இடந்தருமென்று அஞ்சுகின்றேன். நாகரிகம் முதிர்ந்த இக்காலத்தில் குற்றம் செய்ததற்குத் தண்டனை விதிப்பது பழிக்குப் பழியென்னும் பழயகெட்ட வழக்கத்தின் சேடமென்று அதையொழிக்க வியக்கம் ஆரம்பித்துவிட்டது. பதினேழு வயதுக் குட்பட்ட குற்றவாளிக்குத் (Juvenile offender) தண்டனை விதித்தல் ஆங்கில ஆட்சியில் நின்று விட்டது. முதற்குற்றம் செய்தவனுக்கும் (First offender) அப்பதினேழு வயது கடந்திருப்பினும், பெரும்பாலும் தண்டனையின்றி மன்னிப்பு கொடுக்கப்படுகின்றது. எஞ்சிய அரசியல் தண்டனை எல்லையும் நாளுக்குநாள் குறுகிவருகின்றதால் இன்னும் சில காலத்தில் நமது ஆங்கில ஆட்சியில் முற்றும் தண்டனைச் சட்டங்கள் பேரற்று ஒழியுமென்பதை அநுமானிக்கலாம். இவ்வாறு நமது நாட்டில் நிகழ, ஆங்கில ஆட்சியின் பெருமை கூட சிவபெருமானுக்கு வைக்காது முதலியார் அவர்கள் இறைவனைப் பழிக்குப் பழிவாங்கும் வஞ்ச உருவகத் தலைவனாகவாக்கியதற்கு யான் மிகவும் வருந்துகின்றேன்.

(3) நரகம், சிவன் சிருஷ்டி என்றார் முதலியார் அவர்கள். அங்ஙனமாயின் அது, ஸ்தூல உலகமா? சூக்கும உலகமா? என்னும் வினா எழும். ஸ்தூல உலகமாயின், தூர திருஷ்டிக் கண்ணாடி முதலிய கருவிகளால் காணக்கூடியதாயிருத்தல் வேண்டும். அவ்வாறின்றி, சூக்குமமாயின் ஸ்தூல உடம்புடன் மனிதர் செல்லக்கூடாத இடமாதல் வேண்டும். புராண இதிகாசங்களில், பலர் முன்னாளில் தமது ஸ்தூல தேகத்துடன் சுவர்க்க லோகம், எமலோகம், நரகலோகம் இவற்றை தரிசித்ததாகத் தெரிய வருகின்றது. அங்குள்ளோரும் ஸ்தூல உலகத்திற்கு வந்து அவ்வுலகத்தோருடன் கலந்து பற்பல காரியங்கள் செய்ததாகவும் அக்கதைகள் கூறுகின்றன. ஆயினும், யுக்திக்கும் மேலெழுப்பிய வினாவுக்கும் பொருந்திய விடைதரமுடியுமோ? இது பற்றியே நமது சமய ஞானபோதகர் இவற்றை உருவகமென்று கொண்டனர். (Allegorical representations) இவ்வாறு கொண்டாலன்றி நரக சுவர்க்கங்களின் உண்மை தர்க்க ஆராய்ச்சியில் நிலைக்காதென்பது திண்ணம்.

(4) ஒரு ஜீவன்படும் யமதேவனையை அச்சீவன் அறிவானே யன்றி, ஏனையோர் அறிவுக்கு அது எட்டாததாம். சொர்ப்பனம் காணும் ஒருவன் அக்கனவின் துன்பத்தால் வருந்துகின்றானென அவன் படுக்கைக்கு அருகிலுள்ளவர் அநுமானிப்பது போல, யம வேதனையும் அநுமானிக்கப்படும். எவ்வாறு சொப்பனம் அவ்வச்சிவ மனோதர்மத்தின் உற்பத்தியோ, அவ்வாறே யமவேதனையுமாம். பரிசுத்த வாழ்க்கை வாழ்ந்தோர் மனோதருமத்தில் யமவேதனைப் பயிர்கள் முளைக்க இடமில்லை. ஆதலால், நரகம் பாவிகளுக்கு உறையச் சிருஷ்டித்த ஓர் உலகமென்று என்னுதல் பொருந்த

மன்று. சிவபெருமானைச் சிந்திக்த மாத்திரத்தில் பாவத்தால் மனதின் கண்ணெழும் எவ்வகை வேதனைப் பயிரும் அழியும்.

(5) குற்றம் செய்த பல காலத்துக்குப் பிறகு தண்டனை விதிப்பது தகாதென்பது நாகரிக அரசியல் சட்டமாதலால், சிவத்தின் ஆட்சியில் அதற்கும் தாழ்ந்த சட்டம் எவ்வாறு யுக்திக்குப் பொருந்தும்? ஒவ்வொரு உயிரும் முதலியார் கூறியதுபோல் பாவ புண்ணியப் பயிர்களை இட்டு வளர்ப்பதால் அவற்றைத் தாமே அறுவடை செய்வது முண்டு; அதை விளையாமல் அழிப்பது முண்டு. (சணல் - Hemp பயிர்போல்) மற்றும் விளைவித்துத் தாம் அநுபவியாது தமது மக்களுக்கு விடுவதுமுண்டு. இவ்வாறே பாவ புண்ணிய பயன்களும் உலகில் முடிவாகின்றன. கடவுள் ஊட்டுவதென்பது உபசார வழக்கு.

(6-9) சுவர்க்க நரகங்களில், செய்த புண்ணிய பாவக்கணக்கு வழக்குகள் முற்றும் தீர்ந்துவிடுமாயின் உலகத்துக்கு மீளும் உயிர்களெல்லாம் ஒரே பதவியில் பிறக்கவேண்டும். பூர்வ புண்ணிய பாவங்களுக்கு எற்ற மனித ஜன்மங்கள் வேறுபாடாவதற்கு இடமில்லை. அவ்வாறு இடமுண்டெனில் சிறைச்சாலையினின்று தப்பி ஓடிய கைதிகள்போல் தேவலோகம், நரகலோகம் இவற்றினின்று தப்பியோடி மனித ஜீவர்கள் பிறக்கின்றா ரென்னும் புராணக் கற்பனை வேண்டும். அவ்வாறு கற்பனை எப்புராணத்திலு மில்லாததால், புண்ணிய பாவசேஷம் மன்னுலகத்திற்கு ஜீவர்கள் கொண்டு வந்தா ரென்பதற்கு இடமில்லை. ஆகையால், அவனவன் நரகசுவர்க்கம் அவனை விட்டுப் பிரிவதில்லை. சுவர்க்கத்தை நரகமாக்குவதும்; நரகத்தை சுவர்க்கமாக்குவதும் அவனவன் முயற்சியும்செய்கையுமேயாம். (The mind in its own place and in itself can make a Heaven of Hell and a Hell of Heaven) இதற்கு நல்வழிச் செல்ல சிவபெருமான் துணை புரிகின்றார். ஆதலால் "நரகரைத் தேவு செய்வான்" என்று சிவபெருமானை அப்பர் கூறுகின்றார்.

நரகத்தைப் பற்றிய வலியதொரு மேற்கோள் யானும், காட்டுகின்றேன் :—

" இரப்பவர்க் கீய வைத்தார் ஈபவர்க் கருளும் வைத்தார்
கரப்பவர் தங்கட் கெல்லாம் கடுநர கங்கள் வைத்தார்
பரப்புநீர் கங்கை தன்னைப் படர்சடைப் பாகம் வைத்தார்
அரக்கனுக் கருளும் வைத்தார் ஐயன்ஐ யாறனாரே "—அப்பர்.

இதில் "வைத்தார்" என்பதற்கு அவற்றின் நிலைகுலையாவண்ணம் அழியாது வைத்திருக்கின்றா ரென்பது பொருள். சிருஷ்டித்தா ரென்பது புராணச் சைவக் கொள்கையாகும். எல்லாம் நீயேயென்று சிவபெருமானை நமது சமய குரவர்கள் துதித்தது எல்லாவற்றையும் ஒரு கலவைக்கிரையாக்குவதற் கன்று. முதலியார் அவர்கள் சிரமத்துடன்காட்டிய மேற்கோள்கள் யாவும் சைவராய்ப் பிறந்த யாவரும் அறிந்தனவேயாம். ஆயினும் அவற்றின் மூலத்தின் விஷயம் ஒன்றாயினும் உரையில் கருத்து பற்பலவாய்க் கொள்ள இடந்தரும். ஆகையால் முதலியார் அவர்கள் புராணக் கூற்றைக் கொண்டது ஒருவழி; அவ்வழி, சைவச் சிறுவர்களுக்குப் போதிப்பது நற்பயனளிக்கலாம். ஆயினும் ஏனைய சமயச் சூழற் காற்றினிடையே இத்தகைய புராணக் கொள்கைகளை நிறுவ முயன்றால், நமது சமயநிலை பஞ்சுபடுநிலை யாகுமென்பது திண்ணம்.

---

[குறிப்பு:— இருவர் கட்டுரையிலும் சில மேற்கோள்களும் பிறவும் இடம் மின்மையால் சுருக்கப்பட்டன. இவ்வாராய்ச்சி இதோடு முடிவடையும்.—பத்திராசிரியர்.]